29th September 1958]

THE HON. SRI P. KAKKAN : No scheme has yet been prepared or sanctioned for the provision of anicuts across these rivers. The question of their execution therefore does not arise.

SRI N. R. THIAGARAJAN : குதிரையாறு அணைக்கட்டுத் திட்டமும் வரதமா நதி அணைக்கட்டுத் திட்டமும் லாபகரமான அணைக்கட்டுத் திட்டங்களாக இருக்கும் என்று கேள்விப்படுகிறோம். அப்படிப்பட்ட இந்தத் திட்டங்களை அரசாங்கத்தார் பரிசீலனை செய்தார்களா, இல்லையா ? பரிசீலனை செய்திருந்தால், அவை லாபகரமான திட்டங்கள் என்று தெரியவருகிறதா, இல்லையா ?

THE HON. SRI P. KAKKAN : அத்திட்டங்களை அரசாங்கத்தார் ஏற்கெனவே பரிசீலித்திருக்கிறார்கள். இருந்தாலும், உணவு-விவசாய இலாகாவின் மூலம் அவைகளை மீண்டும் பரிசீலிப்பதற்கு ஏற்பாடு செய்திருக்கிறோம்.

*Tractors*

* 617 *Q.*—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Home be pleased to state— 9-40 a.m.

(*a*) the number of tractors (including bull-dozers) allotted to and made available at Tiruchirappalli district;

(*b*) the number of them in working condition;

(*c*) the steps taken to make the others function;

(*d*) the acreage of cultivable waste land scheduled to be reclaimed during the Second Plan period; and

(*e*) the actual acreage reclaimed and cultivated?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) 12.

(*b*) 7.

(*c*) Necessary spares have been ordered for the sick units and on receipt of the same the units will be commissioned. The units which are under overhauling will also be commissioned after completing the work speedily.

(*d*) An area of 1,500 acres of virgin lands and 1,000 acres of current fallows is programmed to be reclaimed each year during the Second Plan period.

(*e*) 517 acres of virgin lands and 2,471 acres of current fallows.

SRI S. LAZAR : வருடந்தோறும் 1,500 ஏக்கர் நிலங்களை சாகுபடிக்குக் கொண்டுவருவது என்று திட்டமிடப்பட்டிருந்தபடி, அத்தனை ஏக்கர் நிலங்களை சாகுபடிக்குக் கொண்டு வராததற்குக் காரணம் என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஆயிரத்தி ஐந்நூறு ஏக்கரை சாகுபடிக்குக் கொண்டு வருவது சாத்தியப்படவில்லை. எத்தனை ஏக்கர் நிலங்களை சாகுபடிக்குக் கொண்டுவர சாத்தியப்பட்டதோ அத்தனை ஏக்கர் நிலங்கள் சாகுபடிக்குக் கொண்டு வரப்பட்டிருக்கின்றன.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : There is still so much demand for tractors both in the private sector and the Government. Is it a fact that the import of these tractors has been completely stopped?

[29th September 1958

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Yes, Sir. There is difficulty in getting these tractors imported. Tractors are being made in India also.

SRI V. SUBBIAH : இப்போது, டிராக்டர்களைக் கோரும் எல்லா விவசாயிகளுக்கும் டிராக்டர் கொடுக்கக்கூடிய அளவிற்கு அத்தனை டிராக்டர்கள் அரசாங்கத்திடம் இல்லை. மேலும் சர்க்காரிடம் இருக்கும் டிராக்டர்களிலும் பல சில சமயங்களில் ரிப்பேரில் இருக்கிறது. மணிமுத்தாறு அணைக்கட்டுத் திட்டம் முடிந்த பிறகு ஐந்து புதிய டிராக்டர்களும், வேண்டிய ஸ்பேர் பார்ட்ஸும் போதிய வேலையின்றி தம்மிடம் இருக்கும் என்று அந்தத் திட்ட வேலையில் ஈடுபட்டுள்ள எஞ்சினியர் ஜில்லா ப்ளானிங் போர்டு கூட்டத்தில் தெரிவித்தார். எனவே, மணிமுத்தாறு திட்டம் முடிந்த பிறகு அவைகளை விவசாய இலாகாவிற்கு மாற்றி விவசாய இலாகாவின் மூலம் விவசாயிகளுக்குக் கொடுக்க அரசாங்கம் உத்தேசிக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : விவசாயிகளுக்கு டிராக்டர் கொடுக்கும் திட்டத்தை மீண்டும் மாற்றியமைப்பது சம்பந்தமாக பரிசீலனை நடந்து வருகிறது. மணிமுத்தாறு திட்டத்தில் உபயோகிக்கப்படும் டிராக்டர்களைப் பொறுத்தவரையில், அவைகளைக் கொண்டு வேறு மராமத்துத் திட்டங்கள் நிறைவேற்றப்படவிருக்கின்றன. ஆகையால் அவைகளை அப்படியே விவசாய இலாகாவிற்கு மாற்றுவதற்கில்லை.

SRI A. GOVINDASAMY : சர்க்கார் நடத்தும் விதைப் பண்ணைகளில், டிராக்டர்களை உபயோகிப்பதில் ஏதாவது விசேஷச் சலுகை காட்டப்படுகிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இல்லை.

SRI B. K. LINGA GOWDER : Are the Government aware that out of 12 tractors in the Nilgiris district, 11 tractors are ' sick '?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I have no information about it but I do take it from the hon. Member.

*Pest attack on paddy crops*

* 618 *Q.*—SRI P. G. MANICKAM : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the number of acres of paddy crops affected by the pest attack in Madras State during 1957–58;

(*b*) the estimated loss; and

(*c*) who are the officers that are taking preventive measures for combating the pest attack?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*), (*b*) & (*c*) Figures showing the exact area of paddy crops affected by pests and diseases are not available. However, the acreage treated for pests under food crops, the estimated savings in foodgrains and the money value of savings were as follows :—

1. Acreage treated—264,118 (acres).
2. Estimated savings in tons—32,605 (tons).
3. Money value of savings—Rs. 1,67,70,012.

The Crops and Plant Protection Officers, the District Agricultural Officers and other Subordinate Field staff working under them in the districts carry out intensive propaganda on the remedial